# திருஞானசம்பந்தர்

## வரலாறும் அற்புதமும்



ஆக்கம்:
சரண் சுக்லாம் ஆத்மலிங்கம்
நந்தினி மதியரசன்
தரிசினி காளிதாசன்
ஸ்ரீதரன் ஜீவக்குமார்
யுவப்பிரியா இரா. செல்வன்
லோகராஜ் மோகன்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# இறை வாழ்த்து



காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே.

(நமச்சிவாயத் திருப்பதிகம், திருமுறை: 3)

# திருஞானசம்பந்தர் துதி



வேத நெறி தழைத்து ஓங்க மிகு சைவத் துறை விளங்கப்
பூத பரம்பரை பொலியப் புனித வாய் மலர்ந்து அழுத
சீத வள வயல் புகலித் திருஞான சம்பந்தர்
பாத மலர் தலைக் கொண்டு திருத் தொண்டு பரவுவாம்

(வம்பறா வரிவண்டு சருக்கம், பெரியபுராணம்)

# நன்றி நவில்கிறோம்!

இந்த ‘திருஞானசம்பந்தர் (வரலாறும் அற்புதமும்)’ என்ற மின்னூலை எங்களது இடைகாலத் தமிழ் இலக்கியப் பாடத்தில் ஒரு குழு இடுபணியாக உருவாக்க வாய்ப்பளித்த ஐயா முனைவர் கார்த்திகேஸ் பொன்னையா அவர்களுக்கு எங்களது இதயங்கனிந்த நன்றி உரித்தாகுக. இம்மின்னூலின் நோக்கமானது சமயக்குரவர் நால்வரில் இடம்பெற்ற திருஞானசம்பந்தர் என்னும் சிவத்தொண்டரின் வரலாற்றையும் அவர் நிகழ்த்திய அற்புதங்களையும் அதன்வழி தோன்றிய திருப்பதிகங்களையும் மின்னுலாக்க முறையில் பலருக்கும் இத்தகவல் தொழில்நுட்பச் சாதனங்கள் வழி தெரியப்படுத்துவதாகும். இம்மின்னூல் பலருக்கும் பயனளிக்கும் என்று எதிர்ப்பார்க்கிறோம். நன்றி.

இப்படிக்கு:

ஆசிரியர் குழு

# திருஞானசம்பந்தரின் வரலாறு



சைவச் சமய நெறி உலகில் தழைத்தோங்கப் பாடுபட்டவர்களில் மூவர் முதலிகளின் பங்களிப்புப் பெரிதாகும். இவர்கள் தந்த பண் சுமந்த பாடல்கள் தேவாரப் பாடல்களாக இன்றுவரை மக்களால் பாடப்பட்டு வருகின்றன. இவர்கள் பாடிய தலங்கள் திருமுறைத் தலங்கள் என்று அழைக்கப்படுகின்றன. தேவார மூவரெனப் போற்றப்படுவோர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆவர். தேவார மூவரில் இளம் வயதிலேயே தெய்வ அருள் பெற்றுப் பல பாடல்களை இயற்றியவராகத் திருஞானசம்பந்தர் விளங்குகிறார்.

திருஞானசம்பந்தர் சீர்காழியில் அந்தணர் குலத்தில் பிறந்தவர். தந்தை பெயர் சிவபாத இருதயர், தாயார் பகவதி அம்மையார். அவர் குழந்தைப் பருவத்தில் ஆளுடைப்பிள்ளையார் என அழைக்கப் பெற்றார். தேவாரம் பாடிய ஆசிரியர்களில் திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் கி.பி. 7ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஒரே காலக் கட்டத்தில் வாழ்ந்தவர்கள். இவ்விருவர் வரலாற்றையும் சேக்கிழார் தன்னுடைய பெரியபுராணத்தில் விரிவாகப் பாடியருளியுள்ளார். இவரது தேவாரத் தமிழ், கொஞ்சு தமிழாகும். இறைவனுடன் மகன்மை நெறியில் பயணித்தவர் இவரே. கிரியையின் மூலம் சிவமுத்தி அடைந்தவர். பெரியபுராணத்தில் திருஞானசம்பந்தர் வரலாறே அதிகமான பாடல்களைப் பெற்றது. எனவே தான் பெரியபுராணத்தைப் “பிள்ளைப் பாதி புராணம் பாதி” என்று கூறும் வழக்கம் ஏற்பட்டது. இவர்களுடைய வரலாற்றைப் பெரியபுராணம் கொண்டு விரிவாக நாம் அறியலாம்.



# திருஞானசம்பந்தர் நிகழ்த்திய அற்புதங்கள்

## ஞானப்பால் உண்டமை



ஞானசம்பந்தர் மூன்று வயது குழந்தையாக இருக்கும் போது அவரது தந்தையார் சம்பந்தரைத் தோணியப்பர் ஆலயக் குளக்கரையில் அமரவைத்து விட்டுக் குளிக்கச் சென்றார். நீருக்குள் மூழ்கி தந்தை மந்திர ஜபம் செய்தார். நெடுநேரமாகியும் தந்தை வராதலால் சம்பந்தர் அம்மே! அப்பே! என்று அழுதார். அப்பொழுது திருத்தோணி நாதர் உமாதேவியுடன் காளை வாகனத்தில் எழுந்தருளினார். உமாதேவியார் தன் கையில் வைத்திருந்த அமுதப்பாலை ஞானசம்பந்தருக்குக் கொடுத்தார். குளித்துவிட்டு வந்த சிவபாதர் தன் குழந்தையின் வாயில் பால் ஒழுகுவதைப் பார்த்த போது, யார் கொடுத்தது என்று வினவினார். ஞானச்சம்பந்தர் தோணியப்பரைக் காட்டினார். அப்பொழுது ஞானசம்பந்தர் "தோடுடைய செவியன்" என்ற பாடலைப் பாடி முதல் பதிகத்தைப் பாடியருளினார்.

## பொற்றாளம் பெறுதல்



ஞானப்பாலை உண்ட சம்பந்தர் இறைவன் மீது தலந்தோறும் சென்று பதிகங்களைப் பாடிட புறப்பட்டார். பின்னர் அந்த மூன்று வயது பிஞ்சுக் குழந்தை சீர்காழிக்குத் தொலைவில் உள்ள திருக்கோலக்கா என்று கோவிலுக்குச் சென்றார். தனது முதல் தல யாத்திரையாகச் சென்ற திருக்கோலக்கா கோவிலில், திருஞானச்சமபந்தர் சின்னஞ்சிறு கைகளைத் தட்டி கைத்தாளம் போட்டுக் கொண்டே இறைவனைத் துதித்து "மடையின் வாளை பாய", பதிகம் பாடத் தொடங்கினார். அந்தப் பதிகத்தைச் சம்பந்தர் பாடிக்கொண்டிருந்த போது, அவரது பிஞ்சுக் கரங்கள், கைதாளமிட்டதன் காரணமாகச் சிவந்து போயிருந்தன. தன் பிஞ்சு கரங்கள், சிவக்கச் சிவக்க கைத்தாளம் இட்டு தன் துதிபாடும் குழந்தையை நினைத்து அகமகிழ்ந்த சிவபெருமான், 'சம்பந்தரின் கை வலிக்குமே' என்ற எண்ணம் மேலோங்க அவருக்கு உதவ முன்வந்தார். அதன்படி பொற்றாளத்தைத் திருஞானசம்பந்தருக்கு, ஈசன் கொடுத்தருளினார். அப்பொற்றாளம் ஒலி எழுப்பாததால், அம்பிகை அதற்கு ஓசை கொடுத்தார். சம்பந்தருக்குப் பொற்றாளம் கொடுத்து அருளியதால், இத்தல ஈசன் 'திருத்தாளமுடையார்' என்றும், பொற்றாளத்திற்கு ஓசை வழங்கிய அம்பிகை 'ஓசை நாயகி' என்று அழைக்கப்பட்டார்.



## முத்துச் சிவிகை முதலியன பெறல்

திருஞானசம்பந்தர், தில்லை முதலிய பல தலங்களையும் தரிசித்து நடுநாட்டில் உள்ள திருநெல்வாயிலரத்துறையைச் சேர்ந்தார். களைப்பினால் மாறன்பாடியில் அமர்ந்து அன்றிரவு நித்திரை செய்தார். அரத்துறை பெருமான் சிவிகை, முத்துச் சிவிகை மற்றும் முத்துக் குடை போன்ற முத்துச் சின்னங்களை அருளினார். அவற்றை இறையருளெனப் பெற்ற ஞானசம்பந்தர், எந்தை ஈசன் எம்பெருமான் என்ற திருப்பதிகம் பாடிப்பரவினார்.



திருநெல்வாயில் அரத்துறை திருப்பதிகம்:

எந்தை ஈசன் எம்பெருமான்
ஏறஅமர் கடவுள் என்று ஏத்திச்
சிந்தை செய்பவர்க்கு அல்லால்
சென்று கைகூடுவது அன்றால்
கந்த மாமலர் உந்தி
கடும் புனல் நிவா மல்கு கரைமேல்
அந்தண்சோலை நெல்வாயில்
அரத்துறை அடிகள் தம் அருளே

## உபநயனம்

கவுணிய கோத்திரத்தில், அந்தணக் குலத்தில் பிறந்த சம்பந்தருக்கு ஏழு வயது நெருங்கும் போது சிவபாத இருதயர் தங்கள் குலமரபை எடுத்துக்கூறி 'உபநயனம்' எனப்படும் பூணூல் அணிவிக்கும் சடங்கினைச் சம்பந்தருக்கு செய்தார். 'அனைத்தும் ஐந்தெழுத்துள் அடக்கம்' எனும் என்னும் சம்பந்தர் தொன்மை நெறி போற்றிட எண்ணி அதில் தன்னை ஈடுபடுத்தி கொண்டார். அவர்கள் உபநயனத்தை முடித்த பிறகு, சம்பந்தரிடம் 'மறை நான்கும் தந்தோம்' என்று கூறினர். அங்கு வந்த அந்தணர்கள் வேதங்களின் பல பகுதிகளையும் அவற்றின் பொருளோடு சம்பந்தர் ஓதக் கேட்ட வேதங்களில் தங்கட்கிருந்த ஐயங்களை ஞானசம்பந்தரிடம் கேட்டுத் தெளிவு பெற்றனர். ஞானசம்பந்தர் அவர்களை நோக்கி வேதம் நான்கிலும் மெய்ப் பொருளாய் விளங்கும் திருவைந்தெழுத்தின் சிறப்பைத் 'துஞ்சலும் துஞ்சல்' என்று தொடங்கிப்பாடி அனைவருக்கும் உணர்த்தி அருளினார். இங்கு பஞ்சாக்கரத் திருப்பதிகத்தைப் பாடி சம்பந்தர் அனைவருக்கும் சிவபெருமானின் சிறப்பை உணர்த்தினார்.



## முத்துப் பந்தல் பெறல்

திருஞானசம்பந்தர், திருச்செங்குன்றூரிலிருந்து புறப்பட்டுப் பாண்டிக் கொடுமுடி, வெஞ்சமாக் கூடல், கருவூர் ஆனிலை முதலிய தலங்களைப் பணிந்து சோழ நாடு மீண்டு திருச்சிராப்பள்ளி முதலிய காவிரித் தென்கரைத் தலங்களை வணங்கிக் கொண்டு திருவலஞ்சுழி வந்தடைந்தார். அப்போது இளவேனிற் பருவம் தொடங்கியது. திருவலஞ்சுழி இறைவனை வணங்கிப் பழையாறை மேற்றளியையும் திருச்சத்தி முற்றத்தையும் பணிந்து நண்பகற் பொழுதில் பட்டீச்சுரம் வந்தடைந்தார். சிவப்பூதங்கள் வானத்தில் மறைந்து நின்று பட்டீசுரர் அளித்த முத்துப் பந்தரை ஏந்தியவாறு இது சிவபெருமான் அளித்தது எனக் கூறி ஞானசம்பந்தரின் சிவிகையின் மேல் ஏந்தி நிழல் செய்தன.

## படிக்காசு பெறல்

திருப்புகலூரிலிருந்து திருவீழிமிழலை எனும் திருத்தலத்திற்குச் சம்பந்தரும் அப்பரும் வந்தடைகின்றனர். அந்நாட்களில் அந்த நாடு வறண்டு கிடைக்கின்றது. மக்களிடையே பஞ்சம் அதிகரிக்கிறது. அப்பரும் ஞானசம்பந்தரும் சிவபெருமானை நோக்கி வேண்ட அன்றிவு சம்பந்தரின் கனவில் சிவபெருமான் தோன்றுகிறார். அவர், “பஞ்சம் நீங்கும் கால எல்லைவரை ஆலயத்தின் கிழக்குப் பலிபீடத்திலும் மேற்குப் பலிபீடத்திலும் இருவருக்கும் பொற்காசு அளிக்கின்றோம்!” எனக்கூறி மறைந்தார். விழித்தெழுந்த ஞானசம்பந்தர், அப்பருடன் ஆலயம் சென்றார். கிழக்குப் பலிபீடத்தில் ஞானசம்பந்தர் ஒரு காசு பெற்றார். மேற்குப் பலிபீடத்தில் அப்பர் ஒரு காசு பெற்றார். அவற்றை எடுத்து வந்து பண்டங்கள் வாங்கி அடியார்களின் பசிப்பிணியைப் போக்கி வந்தனர் இருவரும். அப்பருக்குக் கிடைத்த காசு வாசி நிறைவாகவும் அதாவது மாற்று அல்லது தகுதி நிறைந்ததாகவும் தனக்கு கிடைத்த காசு தகுதி குறைவாக உள்ளதையும் பண்டகளின் மூலம் உணர்ந்து உரியவர்களை அழைத்து வினவுகிறார். அதாவது, அப்பர் மக்களுக்குக் கொடுக்கும் பண்டங்கள் காலத் தாமதம் இல்லாமலும் நிறைவாகவும் இருக்கிறது. ஆனால், சம்பந்தர் கொடுக்கும் பண்டங்கள் காலத் தாமதம் அடைந்து குறைவாகவும் உள்ளது. அதற்குக் காரணம், அப்பர் நிறைய கைத்தொண்டு செய்துள்ளார் என்பதுதான். இதனைக் களைய நினைத்து ஞானசம்பந்தர், பெருமானிடம் குறை மாசற்ற காசை வழங்குமாறு ‘தரும் காசு வாசி தீரப் பாடுவன்’ எனப் பாடி வேண்டுகிறார். அதைக் கேட்டு பெருமானும் ‘இக்காசு சால நன்று’ என சொல்லி மாசற்ற காசை நல்கிறார். அதைப் பயன்படுத்தி சம்பந்தர் அவரைச் சார்ந்த மக்களுக்கு உணவு வழங்கிறார். சில நாட்களில் மழை பெய்து பஞ்சம் நீங்கி மக்கள் இனிது வாழத் தொடங்கினர்.

(திருவீழிமிழலை திருத்தலம்)

### திருமறைக் காட்டில் அற்புதம்

ஞானசம்பந்தரும் அப்பரும் அடியவர்களுடன் திருவீழிமிழலையிலிருந்து புறப்பட்டுத் திருவாஞ்சியம் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு அடியவர் எதிர்கொண்டு போற்றத் திருமறைக் காடு அடைந்தனர். ஆலயத்தை வலம் வந்து வாயிலை அணுகினார்கள். வேதங்களால் பூசிக்கப்பெற்றுத் திருக்காப்பிடப்பெற்ற அத்திரு கதவுகள் திறக்கப்படாதிருத்தலையும் மக்கள் வேறோர் பக்கத்தில் வாயில் அமைத்துச் சென்று வழிபட்டு வருதலையும் கண்ட ஞானசம்பந்தர் வேதவனப் பெருமானை உரிய வாயில் வழியே சென்று வழிபட வேண்டுமெனத் திருவுளத்தெண்ணி அப்பரைப் பார்த்து "இக்கதவுகள் திறக்கத் தாங்கள் திருப்பதிகம் பாடியருளுக" என வேண்டினார்.

அப்பர் `பண்ணினேர் மொழியாள்` எனத் தொடங்கித் திருப்பதிகம் பாட அப்பதிகப் பொருட் சுவையில் ஈடுபட்ட இறைவன் பதிகத்தின் நிறைவில் திருக்கதவுகள் திறக்குமாறு செய்தருளினார். இருவரும் ஆலயம் சென்று மறைக்காட்டுறையும் மணாளனைப் போற்றிப் பரவித் திரும்பினர். அப்பர் இக்கதவுகள் இனி திறக்கவும் அடைக்கவும் உரியனவாக இருத்தல் வேண்டுமென எண்ணி ஞானசம்பந்தரை நோக்கி இப்போது தாங்கள் திருக்கதவுகள் அடைக்கப் பாட வேண்டுமென வேண்டினார். ஞானசம்பந்தர் `சதுரம் மறை` எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடினார். முதற்பாடலிலேயே கதவு அடைத்துக் கொண்டது. ஏனைய பாடல்களையும் பாடிப் போற்றினார் ஞானசம்பந்தர். பின்னர் இருவரும் சென்று தத்தம் திருமடங்களில் இனிதுறைந்தனர்.



### பாண்டி நாட்டில் சைவம்

சமணரின் பிடியில் சிக்கிய கூன் பாண்டியனால் மங்கையர்க்கரசியும் குலச்சிறையாரும் மிகுந்த மனவேதனைக் கொண்டனர். சமணர்களின் முக்கியத் தொழிலாக நாட்டு மக்களை மதமாற்றம் செய்ய வைப்பதே இருந்தது. இதனால், அரசி, அமைச்சரின் வேண்டுதற்கிணங்க பாண்டி நாட்டில் சம்பந்தர் தங்கிய மடத்திற்குச் சமணர் இட்ட தீ, கூன் பாண்டியனைப் பற்றியது. சமணரால் மயிற்பீலிகளைக் கொண்டும் மந்திரத்தினாலும் நோயைத் தீர்க்க முடியாதிருந்தது. திருஞானசம்பந்தர் "திருநீற்றுப்பதிகம்" பாடி உடல் முழுதும் வெண்திருநீறு பூசிட, வெப்பு நோய் தீர்ந்தது. சமணர் திருஞானசம்பந்தரை அனல் வாதத்திற்கு அழைக்கின்றனர். தத்தம் மதக் கோட்பாடுகளையும் கருத்துகளையும் கொண்ட ஏடுகளை நெருப்பில் இட்டு, நெருப்பில் வேகாத ஏட்டினைக் கொண்ட மதமே உயர்ந்தது என்று முடிவெடுக்கத் துணிகின்றனர். திருநள்ளாற்றுப் பதிகத்தைச் சம்பந்தர் நெருப்பில் இடுகிறார். அவ்வேடுகள் கருகாதிருக்கின்றன. சமணக்கருத்தைக் கொண்ட ஏடுகள் நெருப்பில்...



(தொடர்ச்சி அடுத்த பக்கத்தில்)

கருகி சாம்பலானது அதோடு விட்டுவிடாமல் சமணர்கள் புனல் வாதத்திற்கு அழைக்கின்றனர். அவ்வாதமானது, தத்தம் மதக் கோட்பாடுகளையும் கருத்துகளையும் கொண்ட ஏடுகளை வைகை ஆற்றில் இட்டு, நீரோட்டத்தோடு செல்லாமல் எதிர்த்து நிற்கும் ஏடும், சமயமும் பெருமையுடையது என்று முடிவெடுக்கும் வாதமாகும். இவ்வாதத்தையே முடிவாகக் கொள்வதற்காகக் குலச்சிறையார் தோற்றவர்களுக்கு என்ன தண்டனை என்று வினவ, சமணர்களே கழுவில் ஏறும் தண்டனையைப் பரிந்துரை செய்தனர். இப்போது தொடக்கத்திலேயே, சமணர் 'ஆருகத' நூலில் குறிப்பிட்ட 'அத்தி நாத்தி' என்ற சொற்றொடரை எழுதி ஆற்றில் விட்டனர். அவை ஆற்றோடு அடித்துக் கொண்டு சென்றது. சம்பந்தரோ 'வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்' என்று எழுதிய ஏட்டினை ஆற்றில் விட்டார். அது ஆற்று வெள்ளத்தின் எதிர்த்திசையில் எதிர்நீச்சல் போட்டு வந்தது. அப்பாடலில், "வேந்தனும் ஓங்குக!" என்று சம்பந்தர் எழுதியமையால் கூன் பாண்டியனின் கூனும் நிமிர்ந்தது. இறுதியாக, சமணர் கழுவேற்றப்பட்டனர்.



## எழும்பைப் பெண்ணுருவாக்கல்

மயிலாப்பூரில் சிவநேசர் என்பவர் ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்து வந்தார். இவர் சிவபக்கதராக இருந்தார். இவருக்குப் பூம்பாவை என்ற மகளொருத்தி இருந்தாள். சைவச் சமயத் தொண்டினைச் செய்யும் திருஞானசம்பந்தருக்குத் தன்னுடைய மகளான பூம்பாவையைத் திருமணம் செய்து வைக்க சிவநேசர் எண்ணியிருந்தார். தன்னுடைய ஏழாம் வயதில் ஒரு நாள் பூம்பாவை தன்னுடைய தோழிகளுடன் மலர் பறித்து விளையாடிக் கொண்டிருந்த பொழுது, பாம்பொன்று தீண்டி இறந்து விட்டாள். திருஞானசம்பந்தருக்குத் திருமணம் செய்து வைக்க எண்ணியிருந்தமையால், தன்னுடைய மகளை எரித்த பின்னும் அவளுடைய எலும்பு, சாம்பலினை நீர் நிலைகளில் கரைக்காது பாதுகாத்து வந்தார் சிவநேசர். திருவொற்றியூருக்குத் திருஞானசம்பந்தர் வருவதை அறிந்த சிவநேசர், அவரைச் சந்தித்தார். சிவநேசர் தன்னுடைய மகள் பூம்பாவையைத் திருஞானசம்பந்தருக்குத் திருமணம் செய்து வைக்க எண்ணியதையும், ஆனால் அவள் சிறுவயதில் பாம்பு தீண்டி இறந்து விட்டதையும், தற்போது அவளுடைய சாம்பல், எலும்பினைப் பாதுகாத்து வைத்திருப்பதைப் பற்றிக் கூறினார். திருஞானசம்பந்தர் 'மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலை' எனும் பாடலைப் பாடிட, பூம்பாவை சாம்பலிலிருந்து பன்னிரெண்டு வயதான பெண்ணாக உயிர்ப்பெற்று வந்தார். இருப்பினும் தானே உயிர் கொடுத்தமையால் பூம்பாவையைத் திருமணம் செய்து கொள்ள இயலாது என திருஞானசம்பந்தர் மறுத்துவிட்டார். அவள் அதோடு சிவத்தொண்டில் மூழ்கினாள்.



## ஆண் பனையைக் குலையீன்றச் செய்தல்

திருவோத்தூரில் ஓர் அன்பர் சிவபெருமானுக்கெனப் பனைகள் அமைத்து வளர்த்தார். அப்பனைகள் அனைத்தும் ஆண்பனைகளாகக் காய்த்திருந்தன. அதைக்கண்ட சமணர்கள் சிவபத்தரிடம் "ஆண்பனை காய்க்குமா?" என்று கேலி செய்வார்கள். அதனால், அன்பர் மிகவும் மனக்கவலைப்பட்டு அதனைத் திருஞானசம்பந்தரிடம் முறையிட்டார். அதனைக் கேட்ட பிள்ளையார், திருக்கோயிலுனுள்ளே நுழைந்து ஆண்டவனை நினைத்து உருகி, 'புத்தெர்ந்தாயென' எனும் திருப்பதிகத்தை அருளினார். திருக்கடைக்காப்பிலே "குரும்பை ஆண்பனை ஈன்குலை ஒத்தூர்" என்று அருளிசெய்தார். அப்பொழுது ஆண்பனைகளெல்லாம் பெண்பனைகளாக மாறின. ஒவ்வொன்றிலும் குலைகள் தொங்கின. காய்களும் பழுத்தன.இவ்வாறு ஆளுடையபிள்ளையார் அன்பருக்கு அருள் செய்தார். இந்த அற்புதத்தைக் கண்ட சமணர்கள் பலர் ஊரை விட்டு ஓடினார்கள். இன்னும் சிலர் வெண்ணீறணிந்து சிவநெறி நின்றனர். பனைகள், பிள்ளையார் அருள்பெற்ற காரணத்தால், தங்கள் காலங்கழித்து முடிவில் சிவமாயின.

## சோதியிற் கலத்தல்

ஞானசம்பந்தரைக் காணும் பெருவேட்கையில் முருக நாயனாரும் நீலநக்கநாயனாரும் சீர்காழி வந்தனர். சிவபாதயிருதயரும் சுற்றத்தாரும் ஞானசம்பந்தர் புண்ணியப் பதினாறு ஆண்டு எய்திய நிலையினராய் இருத்தலை எண்ணி அவரை அணுகி மறை நெறிப்படி வேள்வி செய்ய ஒரு கன்னியைத் திருமணம் புரிந்து கொள்ள வேண்டும் என வேண்டினர். ஞானசம்பந்தர் முதலில் மறுத்தார். ஆயினும் திருவருளை நினைந்து மறைவாழவும் அந்நெறியின் துறைவாழவும் திருமணத்திற்கு இசைவு தெரிவித்தார். சிவபாதயிருதயர் திருநல்லூரில் வாழும் நம்பியாண்டார் என்பவரின் மகளை மணம் பேசி நிச்சயித்தார். நல்லூர் மணவிழாவினால் பொலிவு பெற்றது. அப்பொழுது, "ஞானசம்பந்தனே நீயும் உன் மனைவியும் திருமணம் காண வந்தோரும் இச்சோதியினுள்ளே வந்து சேர்மின்" எனக்கூறி அதனுள்ளே புகுதற்கு வாயிலையும் காட்டி நின்றார். ஞானசம்பந்தர் "இம்மண விழாக் காண வந்தோர் அனைவரும் இச்சோதியுட் புகுமின்" எனக் கூறி `காதலாகி` எனத் தொடங்கும் நமச்சிவாயத் திருப்பதிகம் அருளி நின்றார். திருநீலநக்கர், முருக நாயனார், சிவபாதயிருதயர், நம்பியாண்டார் நம்பி, திருநீலகண்டப் பெரும்பாணர் முதலானோர் தத்தம் துணைவியாருடன் சிவசோதியுட் புகுந்தார்கள். ஆளுடைய பிள்ளையாரைத் தொடர்ந்து வந்த அடியவர் பரிசனங்கள் அருந்தவ முனிவர்கள் முதலிய அனைவரும் சிவசோதியுட் புகுந்த பின் திருஞானசம்பந்தர் தம் காதலியாரைக் கைப்பிடித்து இறைவனது எழில் வளர்சோதியை வலம் வந்து அதனுள்ளே புகுந்து பெருமானோடு ஒன்றி உடனானார். அச்சோதி மறைய பெருமணக்கோயில் முன்போலவே அமைந்தது. அனைவருக்கும் சிவலோகம் வழங்கிய பெருமானை அன்பர்கள் சிவலோகத்தியாகர் எனப் போற்றினர்.



# திருஞானசம்பந்தர் நிகழ்த்திய அற்புதங்களில் தோன்றிய திருப்பதிகங்கள்

**அற்புதம்: ஞானப்பால் உண்டமை**

**திருப்பதிகம்: திருபிரமாபுரம்**

பாடல் எண்: 1

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே

பாடல் எண்: 2

முற்றலாமையிள நாகமோடேன முளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகல னாப்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையால்
தொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

பாடல் எண்: 3

நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர் நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய வோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

பாடல் எண்: 4

விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலையோட்டில்
உண்மகிழ்ந்துபலி தேரியவந்தென துள்ளங்கவர்கள்வன்
மண்மகிழ்ந்தவர வம்மலர்க்கொன்றை மலிந்தவரைமார்பில்
பெண்மகிழ்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

பாடல் எண்: 5

ஒருமைபெண்மையுடையன்சடையன்விடையூரும்மிவனென்ன
அருமையாகவுரை செய்யவமர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததோர் காலம்மிதுவென்னப்
பெருமைபெற்றபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

பாடல் எண்: 6

மறைகலந்தவொலி பாடலோடாடல ராகிமழுவேந்தி
இறைகலந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்கள்வன்
கறைகலந்தகடி யார்பொழில்நீடுயர் சோலைக்கதிர்சிந்தப்
பிறைகலந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

பாடல் எண்: 7

சடைமுயங்குபுன லன்அனலன்னெரி வீசிச்சதிர்வெய்த
உடைமுயங்குமர வோடுழிதந்தென துள்ளங்கவர்கள்வன்
கடன்முயங்குகழி சூழ்குளிர்கானலம் பொன்னஞ்சிறகன்னம்
பெடைமுயங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

பாடல் எண்: 8

வியரிலங்குவரை யுந்தியதோள்களை வீரம்விளைவித்த
உயரிலங்கையரை யன்வலிசெற்றென துள்ளங்கவர்கள்வன்
துயரிலங்கும்முல கிற்பலவூழிகள் தோன்றும்பொழுதெல்லாம்
பெயரிலங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

பாடல் எண்: 9

தாணுதல்செய்திறை காணியமாலொடு தண்டாமரையானும்
நீணுதல்செய்தொழி யந்நிமிர்ந்தானென துள்ளங்கவர்கள்வன்
வாணுதல்செய்மக ளீர்முதலாகிய வையத்தவரேத்தப்
பேணுதல்செய்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

பாடல் எண்: 10

புத்தரோடுபொறி யில்சமணும்புறங் கூறநெறிநில்லா
ஒத்தசொல்லவுல கம்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
மத்தயானைமறு கவ்வுரிபோர்த்ததோர் மாயம்மிதுவென்னப்
பித்தர்போலும்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

பாடல் எண்: 11

அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய
பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தன்னுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தல்எளிதாமே

பதிகத்தின் சாரம்: அருமையான நெறிகளை உலகிற்கு வழங்கும் வேதங்களில் வல்ல பிரமனால் படைக்கப்பட்டதும், அகன்ற மலர் வாவியில் தாமரைகளையுடையதும் ஆகிய பிரமபுரத்துள் மேவிய முத்தி நெறி சேர்க்கும் முதல்வனை, ஒருமைப்பாடு உடைய மனத்தைப் பிரியாதே பதித்து உணரும் ஞானசம்பந்தன் போற்றி உரைத்தருளிய திருநெறியாகிய அருநெறியை உடைய தமிழாம் இத்திருப்பதிகத்தை ஓத வல்லவர்களின் பழவினைகள் தீர்தல் எளிதாகும். ஊழ்வினை தீர்வதற்குரிய மார்க்கங்கள் பல இருப்பினும், இத்திருப்பதிகத்தை ஓதுதலே எளிமை வாய்ந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

**அற்புதம்: பொற்றாளம் பெறுதல்**

**திருப்பதிகம்: திருக்கோலக்கா**

பாடல் எண்: 1

மடையில் வாளை பாய மாதரார்

குடையும் பொய்கைக் கோலக் காவுளான்

சடையும் பிறையுஞ் சாம்பற் பூச்சுங்கீள்

உடையுங் கொண்ட வுருவ மென்கொலோ.

பாடல் எண்: 2

பெண்டான் பாக மாகப் பிறைச்சென்னி

கொண்டான் கோலக் காவு கோயிலாக்

கண்டான் பாதங் கையாற் கூப்பவே

உண்டா னஞ்சை யுலக முய்யவே.

பாடல் எண்: 3

பூணற் பொறிகொ ளரவம் புன்சடை

கோணற் பிறையன் குழகன் கோலக்கா

மாணப் பாடி மறைவல் லானையே

பேணப் பறையும் பிணிக ளானவே.

பாடல் எண்: 4

தழுக்கொள் பாவந் தளர வேண்டுவீர்

மழுக்கொள் செல்வன் மறிசே ரங்கையான்

குழுக்கொள் பூதப் படையான் கோலக்கா

இழுக்கா வண்ண மேத்தி வாழ்மினே.

பாடல் எண்: 5

மயிலார் சாயன் மாதோர் பாகமா

எயிலார் சாய வெரித்த வெந்தைதன்

குயிலார் சோலைக் கோலக் காவையே

பயிலா நிற்கப் பறையும் பாவமே.

பாடல் எண்: 6

வெடிகொள் வினையை வீட்ட வேண்டுவீர்

கடிகொள் கொன்றை கலந்த சென்னியான்

கொடிகொள் விழவார் கோலக் காவுளெம்

அடிகள் பாத மடைந்து வாழ்மினே.

பாடல் எண்: 7

நிழலார் சோலை நீல வண்டினங்

குழலார் பண்செய் கோலக் காவுளான்

கழலான் மொய்த்த பாதங் கைகளால்

தொழலார் பக்கல் துயர மில்லையே.

பாடல் எண்: 8

எறியார் கடல்சூ ழிலங்கைக் கோன்றனை

முறியார் தடக்கை யடர்த்த மூர்த்திதன்

குறியார் பண்செய் கோலக் காவையே

நெறியாற் றொழுவார் வினைகள் நீங்குமே.

பாடல் எண்: 9

நாற்ற மலர்மே லயனு நாகத்தில்

ஆற்ற லணைமே லவனுங் காண்கிலாக்

கூற்ற முதைத்த குழகன் கோலக்கா

ஏற்றான் பாத மேத்தி வாழ்மினே.

பாடல் எண்: 10

பெற்ற மாசு பிறக்குஞ் சமணரும்

உற்ற துவர்தோ யுருவி லாளருங்

குற்ற நெறியார் கொள்ளார் கோலக்காப்

பற்றிப் பரவப் பறையும் பாவமே.

பாடல் எண்: 11

நலங்கொள் காழி ஞானசம் பந்தன்

குலங்கொள் கோலக் காவு ளானையே

வலங்கொள் பாடல் வல்ல வாய்மையார்

உலங்கொள் வினைபோ யோங்கி வாழ்வரே.

பதிகத்தின் சாரம்: இசைக்கலையில் விருப்பமுள்ளவர்கள் இங்கு வந்து வழிபட்டு சென்றால் இசையில் வல்லவராகலாம். கோயிலின் நுழைவு வாயிலிலேயே ஞானசம்பந்தருக்கு தாளம் கொடுக்கும் ஈசனும், ஓசை கொடுக்கும் நாயகியும் அருள்பாலிக்கிறார்கள். இந்திரனும் சூரியனும் இத்தலம் வந்து பூஜை செய்து பலனடைந்துள்ளனர்.

**அற்புதம்: முத்துச் சின்னங்களைப் பெறல்**

**திருப்பதிகம்: திருநெல்வாயிலரத்துறை**

பாடல் எண்: 1

எந்தை யீசனெம் பெருமான் ஏறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லாற் சென்றுகை கூடுவ தன்றால்
கந்த மாமல ருந்திக் கடும்புன னிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயில் அரத்துறை அடிகள்தம்
அருளே

பாடல் எண்: 2

ஈர வார்சடை தன்மேல் இளம்பிறை யணிந்தவெம் பெருமான்
சீருஞ் செல்வமு மேத்தாச் சிதடர்கள் தொழச்செல்வ தன்றால்
வாரி மாமல ருந்தி வருபுன னிவாமல்கு கரைமேல்
ஆருஞ் சோலை நெல்வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே

பாடல் எண்: 3

பிணி கலந்தபுன் சடைமேற் பிறையணி சிவனெனப் பேணிப்
பணி கலந்துசெய் யாத பாவிகள் தொழச்செல்வ தன்றால்
மணி கலந்துபொன் னுந்தி வருபுன னிவாமல்கு கரைமேல்
அணி கலந்தநெல் வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே

பாடல் எண்: 4

துன்னவாடையொன் றுடுத்துத் தூயவெண் ணீற்றின ராகி
உன்னி நைபவர்க் கல்லா ல் ஒன்றுங்கை கூடுவ தன்றால்
பொன்னு மாமணி யுந்திப் பொருபுன னிவாமல்கு கரைமேல்
அன்ன மாருநெல் வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே

பாடல் எண்: 5

வெருகு ரிஞ்சுவெங் காட்டில் ஆடிய விமலனென் றுள்கி
உருகி நைபவர்க் கல்லால் ஒன்றுங்கை கூடுவ தன்றால்
முருகு ரிஞ்சுபூஞ் சோலை மொய்ம்மலர் சுமந்திழி நிவாவந்
தருகு ரிஞ்சுநெல் வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே

பாடல் எண்: 6

உரவு நீர்சடைக் கரந்த வொருவனென் றுள்குளிர்ந் தேத்திப்
பரவி நைபவர்க் கல்லாற் பரிந்துகை கூடுவ தன்றால்
குரவ நீடுயர் சோலைக் குளிர்புனல் நிவாமல்கு கரைமேல்
அரவ மாருநெல் வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே

பாடல் எண்: 7

நீல மாமணி மிடற்று நீறணி சிவனெனப் பேணும்
சீல மாந்தர்கட் கல்லாற் சென்றுகை கூடுவ தன்றால்
கோல மாமல ருந்திக் குளிர்புன னிவாமல்கு கரைமேல்
ஆலுஞ் சோலைநெல் வாயில் அரத்துறை அடிகள்தம் அருளே

பாடல் எண்: 8

செழுந்தண் மால்வரை யெடுத்த செருவலி யிராவண னலற
அழுந்த வூன்றிய விரலான் போற்றியென் பார்க்கல்ல தருளான்
கொழுங்க னிசுமந் துந்திக் குளிர்புன னிவாமல்கு கரைமேல்
அழுந்துஞ் சோலைநெல் வாயில் அரத்துறை அடிகள்தம்
அருளே

பாடல் எண்: 9

நுணங்கு நூலயன் மாலும் இருவரும் நோக்கரி யானை
வணங்கி நைபவர்க் கல்லால் வந்துகை கூடுவ தன்றால்
மணங்க மழ்ந்துபொன் னுந்தி வருபுன னிவாமல்கு கரைமேல்
அணங்குஞ் சோலைநெல் வாயில் அரத்துறை அடிகள்தம்
அருளே

பாடல் எண்: 10

சாக்கி யப்படு வாருஞ் சமண்படு வார்களும் மற்றும்
பாக்கி யப்பட கில்லாப் பாவிகள் தொழச்செல்வ தன்றால்
பூக்க மழ்ந்துபொன் னுந்திப் பொருபுன னிவாமல்கு கரைமேல்
ஆர்க்குஞ் சோலைநெல் வாயில் அரத்துறை அடிகள்தம்
அருளே

பாடல் எண்: 11

கறையி னார்பொழில் சூழ்ந்த காழியுண் ஞானசம் பந்தன்
அறையும் பூம்புனல் பரந்த அரத்துறை அடிகள்தம் அருளை
முறைமை யாற்சொன்ன பாடல் மொழியும் மாந்தர்தம்
வினைபோய்ப்
பறையு மையுற வில்லை பாட்டிவை பத்தும்வல் லார்க்கே

பதிகத்தின் சாரம்: கருமை நிறம் அமைந்த பொழில்கள் சூழ்ந்துள்ள சீகாழிப்பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன், ஒலிக்கின்ற அழகிய புனல் பரவிய நெல்வாயில் அரத்துறை அடிகளின் திருவருளைப் பெறுதற்குரிய நெறிகளை முறையோடு தெரிவித்துள்ள இப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓதவல்லவர்கட்கு ஐயுறவின்றி வினைகள் நீங்கும். இஃது உறுதி.

**அற்புதம்: உபநயனம்**

**திருப்பதிகம்: பஞ்சாக்கரம்**

பாடல் எண்: 1

துஞ்சலும் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்சவு தைத்தன அஞ்செ ழுத்துமே.

பாடல் எண்: 2

மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுள் மந்திரம் அஞ்செ ழுத்துமே.

பாடல் எண்: 3

ஊனில் உயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞான விளக்கினை யேற்றி நன்புலத்
தேனை வழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆன கெடுப்பன அஞ்செ ழுத்துமே.

பாடல் எண்: 4

நல்லவர் தீயர் எனாது நச்சினர்
செல்லல் கெடச்சிவ முத்தி காட்டுவ
கொல்ல நமன்றமர் கொண்டு போமிடத்
தல்லல் கெடுப்பன அஞ்செ ழுத்துமே.

பாடல் எண்: 5

கொங்கலர் வன்மதன் வாளி யைந்தகத்
தங்குள பூதமும் அஞ்ச ஐம்பொழில்
தங்கர வின்படம் அஞ்சுந் தம்முடை
அங்கையில் ஐவிரல் அஞ்செ ழுத்துமே.

பாடல் எண்: 6

தும்மல் இருமல் தொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்
அம்மையி னுந்துணை அஞ்செ ழுத்துமே.

பாடல் எண்: 7

வீடு பிறப்பை அறுத்து மெச்சினர்
பீடை கெடுப்பன பின்னை நாள்தொறும்
மாடு கொடுப்பன மன்னு மாநடம்
ஆடிஉ கப்பன அஞ்செ ழுத்துமே.

பாடல் எண்: 8

வண்டம ரோதி மடந்தை பேணின
பண்டை யிராவணன் பாடி உய்ந்தன
தொண்டர்கள் கொண்டு துதித்த பின்னவர்க்
கண்டம் அளிப்பன அஞ்செ ழுத்துமே.

பாடல் எண்: 9

கார்வணன் நான்முகன் காணு தற்கொணாச்
சீர்வணச் சேவடி செவ்வி நாள்தொறும்
பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட்
கார்வணம் ஆவன அஞ்செ ழுத்துமே.

பாடல் எண்: 10

புத்தர் சமண்கழுக் கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்கள் தெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வி னைப்பகைக்
கத்திரம் ஆவன அஞ்செ ழுத்துமே.

பாடல் எண்: 11

நற்றமிழ் ஞானசம் பந்தன் நான்மறை
கற்றவன் காழியர் மன்னன் உன்னிய
அற்றமில் மாலையீ ரைந்தும் அஞ்செழுத்
துற்றன வல்லவர் உம்ப ராவரே.

பதிகத்தின் சாரம்: நன்னெறி கூட்டுவிக்கும் தமிழ் பரப்பும், ஞானசம்பந்தன், நான்கு வேதங்களையும் கற்று வல்லவனாய்ச் சீகாழி மக்கள் தலைவனாய் மனத்தால் தியானித்துப் பாடிய, கேடுகள் வாராமல் தடுக்கும் திருவைந்தெழுத்தின் பெருமைகளை எடுத்துரைக்கும் இம்மாலையின் பத்துப் பாடல்களையும் ஓதவல்லவர்கள் தேவர்களாவார்கள்.

**அற்புதம்: முத்துப் பந்தல் பெறல்**

**திருப்பதிகம்: திருப்பட்டீச்சரம்**

பாடல் எண்: 1

பாடன்மறைசூடன்மதி பல்வளையொர்பாகமதின்
மூன்றொர்கணையால்
கூடவெரியூட்டியெழில் காட்டிநிழல்கூட்டுபொழில்
சூழ்பழைசையுள்
மாடமழ பாடியுறை பட்டிசர மேயகடி கட்டரவினார்
வேடநிலை கொண்டவரை வீடுநெறி காட்டிவினை வீடுமவரே

பாடல் எண்: 2

நீரின்மலி புன்சடையர் நீளரவு கச்சையது நச்சிலையதோர்
கூரின்மலி சூலமது வேந்தியுடை கோவணமு மானினுரிதோல்
காரின்மலி கொன்றைவிரி தார்கடவுள் காதல்செய்து
மேயநகர்தான்
பாரின்மலி சீர்பழைசை பட்டிசர மேத்தவினை பற்றழியுமே

பாடல் எண்: 3

காலைமட வார்கள்புனலாடுவது கௌவைகடியார்மறுகெலாம்
மாலைமண நாறுபழை யாறைமழ பாடியழ காயமலிசீர்ப்
பாலையன நீறுபுனை மார்பனுறை பட்டிசர மேபரவுவார்
மேலையொருமால்கடல்கள் போல்பெருகி
விண்ணுலகமாளுமவரே

பாடல் எண்: 4

கண்ணின்மிசை நண்ணியிழிவிப்பமுக
மேத்துகமழ்செஞ்சடையினான்
பண்ணின்மிசை நின்றுபல பாணிபட வாடவல பான்மதியினான்
மண்ணின்மிசை நேரின்மழபாடிமலி பட்டிசரமேமருவுவார்
விண்ணின்மிசை வாழுமிமையோரொடுட னாதலதுமேவலெளிதே

பாடல் எண்: 5

மருவமுழ வதிரமழபாடிமலி மத்தவிழ வார்க்கவரையார்
பருவமழை பண்கவர்செய்பட்டிசர மேயபடர்புன்சடையினான்
வெருவமதயானையுரி போர்த்துமையையஞ்சவரு
வெள்விடையினான்
உருவமெரி கழல்கடொழவுள்ளமுடை யாரையடையாவினைகளே

பாடல் எண்: 6

மறையினொலி கீதமொடு பாடுவனபூதமடி மருவிவிரவார்
பறையினொலி பெருகநிகழ் நட்டமமர் பட்டிசரமேயபனிகூர்
பிறையினொடுமருவியதொர் சடையினிடையேற்றபுன
றோற்றநிலையாம்
இறைவனடி முறைமுறையினேத்துமவர்
தீத்தொழில்களில்லர்மிகவே

பாடல் எண்: 7

பிறவிபிணி மூப்பினொடு நீங்கியிமை யோருலகு பேணலுறுவார்
துறவியெனு முள்ளமுடை யார்கள்கொடி வீதியழ காயதொகுசீர்
இறைவனுறை பட்டிசர மேத்தியெழு வார்கள்வினை
யேதுமிலவாய்
நறவவிரை யாலுமொழி யாலும்வழி பாடுமற வாதவவரே

பாடல் எண் : 8

நேசமிகு தோள்வலவ னாகியிறை வன்மலையை நீக்கியிடலும்
நீசன்விறல் வாட்டிவரை யுற்றதுண ராதநிரம் பாமதியினான்
ஈசனுறை பட்டிசர மேத்தியெழு வார்கள்வினை யேதுமிலவாய்
நாசமற வேண்டுதலி னண்ணலெளி தாமமரர் விண்ணுலகமே

பாடல் எண்: 9

தூயமல ரானுநெடி யானுமறி யாரவன தோற்றநிலையின்
ஏயவகை யானதனை யாரதறி வாரணிகொண் மார்பினகலம்
பாயநல நீறதணி வானுமைத னோடுமுறை பட்டிசரமே
மேயவன தீரடியு மேத்தவெளி தாகுநல மேலுலகமே

பாடல் எண்: 10

தடுக்கினை யிடுக்கிமட வார்களிடு பிண்டமது வுண்டுழல்தரும்
கடுப்பொடியுடற்கவசர்கத்துமொழி காதல்செய்தி டாதுகமழ்சேர்
மடைக்கயல் வயற்கொண்மழபாடிநகர் நீடுபழை
யாறையதனுள்
படைக்கொடு கரத்தன்மிகு பட்டிசரமேத்தவினை பற்றறுதலே

பாடல் எண்: 11

மந்தமலி சோலைமழ பாடிநகர் நீடுபழை யாறையதனுள்
பந்தமுயர் வீடுநல பட்டிசர மேயபடர் புன்சடையனை
அந்தண்மறை யோரினிது வாழ்புகலி ஞானசம் பந்தனணியார்
செந்தமிழ்கள் கொண்டினிது செப்பவல தொண்டர்வினை
நிற்பதிலவே

பதிகத்தின் சாரம்: தென்றல் உலாவும் சோலைகளையுடைய திருமழபாடி என்னும் நகர்ப் பகுதியைத் தன்னுள் கொண்ட நெடிய பழையாறை என்னும் திருத்தலத்தில், தன்னையடைந்தவர்கட்குப் பந்தமும், வீடும் அருளவல்ல நல்ல திருப்பட்டீச்சரம் என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளுகின்றான் படர்ந்த சிறுசடைகளையுடைய சிவபெருமான். அப்பெருமானைப் போற்றி எவ்வுயிர்களிடத்தும் இரக்கமுள்ள மறையோர்கள் இனிது வாழ்கின்ற திருப்புகலியில் அவதரித்த ஞானசம்பந்தன் அழகிய செந்தமிழில் அருளிய இப்பதிகத்தைக் கேட்டற்கும், உணர்தற்கும் இனிதாகச் சொல்லவல்ல தொண்டர்களின் வினைகள் நீங்கும்.

**அற்புதம்: படிக்காசு பெறுதல்**

**திருப்பதிகம்: திருவீழிமிழலை**

பாடல் எண்: 1

புள்ளித்தோ லாடை பூண்பது நாகம் பூசுசாந் தம்பொடி நீறு

கொள்ளித்தீ விளக்குக்கூளிகள் கூட்டங்காளியைக்குணஞ்செய்கூத் துடையோன்

அள்ளற்கா ராமை யகடுவான் மதிய மேய்க்கமுட் டாழைக ளானை

வெள்ளைக் கொம்பீனும் விரிபொழில் வீழி மிழலையா னெனவினை கெடுமே.

பாடல் எண்: 2

இசைந்தவா றடியா ரிடுதுவல் வானோ ரிழுகுசந் தனத்திளங் கமலப்

பசும்பொன்வா சிகைமேற் பரப்புவாய் கரப்பாய் பத்திசெய் யாதவர் பக்கல்

அசும்புபாய் கழனி யலர்கயன் முதலோ டடுத்தரிந் தெடுத்தவான் சும்மை

விசும்புதூர்ப் பனபோல் விம்மிய வீழி மிழலையா னெனவினை கெடுமே.

பாடல் எண்: 3

நிருத்தன்ஆ றங்கன் நீற்றன்நான் மறையன் நீலமார் மிடற்றன்நெற் றிக்கண்

ஒருத்தன்மற் றெல்லா வுயிர்கட்கு முயிரா யுளனிலன் கேடிலி யுமைகோன்

திருத்தமாய் நாளு மாடுநீர்ப் பொய்கை சிறியவ றறிவினின் மிக்க

விருத்தரை யடிவீழ்ந் திடம்புகும் வீழி மிழலையா னெனவினை கெடுமே.

பாடல் எண்: 4

தாங்கருங் காலந் தவிரவந்திருவர் தம்மொடுங் கூடினா ரங்கம்

பாங்கினாற் றரித்துப் பண்டுபோ லெல்லாம் பண்ணிய கண்ணுதற் பரமர்

தேங்கொள்பூங் கமுகு தெங்கிளங் கொடிமாச் செண்பகம் வண்பலா விலுப்பை

வேங்கைபூ மகிழால் வெயிற்புகா வீழி மிழலையா னெனவினை கெடுமே.

பாடல் எண்: 5

கூசுமா மயானங் கோயில்வா யிற்கட் குடவயிற் றனசில பூதம்

பூசுமா சாந்தம் பூதிமெல் லோதி பாதிநற் பொங்கர வரையோன்

வாசமாம் புன்னை மௌவல்செங் கழுநீர் மலரணைந் தெழுந்தவான் தென்றல்

வீசுமாம் பொழிற்றேன் றுவலைசேர் வீழி மிழலையா னெனவினை கெடுமே.

பாடல் எண்: 6

பாதியோர் மாதர் மாலுமோர் பாகர் பங்கயத் தயனுமோர் பாலர்

ஆதியாய் நடுவா யந்தமாய் நின்ற வடிகளா ரமரர்கட் கமரர்

போதுசேர் சென்னிப் புரூரவாப் பணிசெய் பூசுரர் பூமக னனைய

வேதியர் வேதத் தொலியறா வீழி மிழலையா னெனவினை கெடுமே.

பாடல் எண்: 7

தன்றவம் பெரிய சலந்தர னுடலந் தடிந்தசக் கரமெனக் கருளென்

றன்றரி வழிபட் டிழிச்சிய விமானத் திறையவன் பிறையணி சடையன்

நின்றநாள் காலை யிருந்தநாண் மாலை கிடந்தமண் மேல்வரு கலியை

வென்றவே தியர்கள் விழாவறா வீழி மிழலையா னெனவினை கெடுமே.

பாடல் எண்: 8

கடுத்தவா ளரக்கன் கைலையன் றெடுத்த கரமுரஞ் சிரநெரிந் தலற

அடுத்ததோர் விரலா லஞ்செழுத் துரைக்க வருளினன் றடமிகு நெடுவாள்

படித்தநான் மறைகேட் டிருந்தபைங் கிளிகள் பதங்களை யோதப்பா டிருந்த

விடைக்குலம் பயிற்றும் விரிபொழில் வீழி மிழலையா னெனவினை கெடுமே.

பாடல் எண்: 9

அளவிட லுற்ற வயனொடு மாலு மண்டமண் கெண்டியுங் காணா

முளையெரி யாய மூர்த்தியைத் தீர்த்த முக்கணெம் முதல்வனை முத்தைத்

தளையவிழ் கமலத் தவிசின்மே லன்னந் தன்னிளம் பெடையொடும் புல்கி

விளைகதிர்க் கவரி வீசவீற் றிருக்கு மிழலையா னெனவினை கெடுமே.

பாடல் எண்: 10

கஞ்சிப்போ துடையார் கையிற்கோ சாரக் கலதிகள் கட்டுரை விட்டு

அஞ்சித்தே விரிய வெழுந்தநஞ் சதனை யுண்டம ரர்க்கமு தருளி

இஞ்சிக்கே கதலிக் கனிவிழக் கமுகின் குலையொடும் பழம்விழத் தெங்கின்

மிஞ்சுக்கே மஞ்சு சேர்பொழில் வீழி மிழலையா னெவினை கெடுமே.

பாடல் எண்: 11

வேந்தர்வந் திறைஞ்ச வேதியர் வீழி மிழலையுள் விண்ணிழி விமானத்

தேய்ந்ததன் றேவி யோடுறை கின்ற வீசனை யெம்பெரு மானைத்

தோய்ந்தநீர்த் தோணி புரத்துறை மறையோன் றூமொழி ஞானசம் பந்தன்

வாய்ந்தபா மாலை வாய்நவில் வாரை வானவர் வழிபடு வாரே.

பதிகத்தின் சாரம்: சிவபெருமான் புலித்தோல் ஆடை உடுத்தவர். பாம்பை ஆபரணமாக அணிந்தவர். நறுமணம் கமழும் திருநீற்றைப் பொடியாகப் பூசியவர். சுடுகாட்டில் கொள்ளி நெருப்பை விளக்காகக் கொண்டு பூதகணங்கள் சூழக் காளியுடன் நடனம் புரிந்தவர். சேற்றில் விளங்கும் ஆமையின் வயிறு போன்ற சந்திரனும், யானையின் கொம்பு போன்ற தாழையும் விளங்கும் சோலைகளையுடைய திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். அப்பெருமானின் திருநாமத்தை ஓத வினையாவும் கெடும்.

**அற்புதம்: திருமறைக்காட்டில் திருக்கதவு மூடப் பாடுதல்**

**திருப்பதிகம்: திருமறைக்காடு**

பாடல் எண்: 1

சதுரம் மறைதான் றுதிசெய் துவணங்கும்

மதுரம் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா

இதுநன் கிறைவைத் தருள்செய் கவெனக்குன்

கதவந் திருக்காப்புக் கொள்ளுங் கருத்தாலே.

பாடல் எண்: 2

சங்கந் தரளம் மவைதான் கரைக்கெற்றும்

வங்கக் கடல்சூழ் மறைக்காட் டுறைமைந்தா

மங்கை யுமைபா கமுமா கவிதென்கொல்

கங்கை சடைமே லடைவித் தகருத்தே.

பாடல் எண்: 3

குரவங் குருக்கத் திகள்புன் னைகள்ஞாழல்

மருவும் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா

சிரமும் மலருந் திகழ்செஞ் சடைதன்மேல்

அரவம் மதியோ டடைவித் தலழகே.

பாடல் எண்: 4

படர்செம் பவளத் தொடுபன் மலர்முத்தம்

மடலம் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா

உடலம் முமைபங் கமதா கியுமென்கொல்

கடனஞ் சமுதா வதுவுண் டகருத்தே.

பாடல் எண்: 5

வானோர் மறைமா தவத்தோர் வழிபட்ட

தேனார் பொழில்சூழ் மறைக்காட் டுறைசெல்வா

ஏனோர் தொழுதேத் தவிருந் தநீயென்கொல்

கானார் கடுவே டுவனா னகருத்தே.

பாடல் எண்: 6

பலகா லங்கள்வே தங்கள்பா தங்கள்போற்றி

மலரால் வழிபா டுசெய்மா மறைக்காடா

உலகே ழுடையாய் கடைதோ றுமுன்னென்கொல்

தலைசேர் பலிகொண் டதிலுண் டதுதானே.

பாடல் எண்: 7

வேலா வலயத் தயலே மிளிர்வெய்தும்

சேலார் திருமா மறைக்காட் டுறைசெல்வா

மாலோ டயனிந் திரனஞ் சமுனென்கொல்

காலார் சிலைக்கா மனைக்காய்ந் தகருத்தே.

பாடல் எண்: 8

கலங்கொள் கடலோ தமுலா வுகரைமேல்

வலங்கொள் பவர்வாழ்த் திசைக்கும் மறைக்காடா

இலங்கை யுடையா னடர்ப்பட் டிடரெய்த

அலங்கல் விரலூன் றியருள் செய்தவாறே.

பாடல் எண்: 9

கோனென் றுபல்கோ டியுருத் திரர்போற்றும்

தேனம் பொழில்சூழ் மறைக்காட் டுறைசெல்வா

ஏனங் கழுகா னவருன் னைமுனென்கொல்

வானந் தலமண் டியுங்கண் டிலாவாறே.

பாடல் எண்: 10

வேதம் பலவோ மம்வியந் தடிபோற்ற

ஓதம் முலவும் மறைக்காட் டிலுறைவாய்

ஏதில் சமண்சாக் கியர்வாக் கிவையென்கொல்

ஆத ரொடுதா மலர்தூற் றியவாறே.

பாடல் எண்: 11

காழிந் நகரான் கலைஞா னசம்பந்தன்

வாழும் மறைக்கா டனைவாய்ந் தறிவித்த

ஏழின் னிசைமா லையீரைந் திவைவல்லார்

வாழி யுலகோர் தொழவா னடைவாரே.

பதிகத்தின் சாரம்: இனிய பொழில்கள் சூழ்ந்த திருமறைக்காட்டில் வேதங்கள் நான்கும் துதி செய்து வணங்க வீற்றிருக்கும் வலியோனே! உன் திருக்கோயில் கதவுகள் முன் உள்ளவாறே திருக்காப்புக் கொள்ளும் கருத்தோடு வினவிய இக்கேள்விகளுக்கு எனக்கு நல்ல வண்ணம் விடை அருள்வாயாக என ஞானசம்பந்தர் தன் முதல் பாடலை துதிப்பார். தொடர்ந்து பாடப்படும் பத்து பாடல்களிலும் திருமறைக்காட்டை புகழ்ந்து அதில் வீற்றிருக்கும் சிவபெருமானின் சிறப்பையும் கூறி ஒவ்வொரு பாடலிலும் ஒரு கேள்வி எழுப்பப்படும்.

**அற்புதம்: பாண்டி நாட்டில் அற்புதம்**

**திருப்பதிகம்: திருநீற்றுப்பதிகம்**

பாடல் எண்: 1

மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருஆல வாயான் திருநீறே.

பாடல் எண்: 2

வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு வுண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே

பாடல் எண்: 3

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருஆல வாயான் திருநீறே.

பாடல் எண்: 4

காண இனியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி அணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருஆல வாயான் திருநீறே.

பாடல் எண்: 5

பூச இனியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச இனியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருஆல வாயான் திருநீறே.

பாடல் எண்: 6

அருத்தம தாவது நீறு அவல மறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வானம் அளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே.

பாடல் எண்: 7

எயிலது அட்டது நீறு இருமைக்கும் உள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தால வாயான் திருநீறே.

பாடல் எண் : 8

இராவணன் மேலது நீறு எண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவ மறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவ மாவது நீறு
அராவணங் குந்திரு மேனி ஆல வாயான் திருநீறே.

பாடல் எண்: 9

மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல உடம்பிடர் தீர்க்கும் இன்பந் தருவது நீறு
ஆலம துண்ட மிடற்றெம் மால வாயான் திருநீறே.

பாடல் எண்: 10

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங் கூட
கண்டிகைப் பிப்பது நீறு கருத இனியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளார் ஏத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்தும் ஆல வாயான் திருநீறே.

பாடல் எண்: 11

ஆற்றல் அடல்விடை யேறும் ஆலவா யான்திரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்ன னுடலுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே.

பதிகத்தின் சாரம்: ஆற்றலும், பிறரைக் கொல்லும் வலிமையும் உடைய விடையின்மீது ஏறிவரும் ஆலவாயான் திருநீற்றைப் போற்றிப் புகலியில் விளங்கும் பூசுரனாகிய ஞானசம்பந்தன் சைவத்தின் பெருமையைத் தெளிவித்துப் பாண்டியன் உடலில் பற்றிய தீமை விளைத்த பிணி தீருமாறு சாற்றிய இப்பதிகப்பாடல்கள் பத்தையும் ஓதவல்லவர் நல்லவராவார்.



**அற்புதம்: எழும்பைப் பெண்ணுருவாக்கல்**

**திருப்பதிகம்: திருமயிலாப்பூர்**

பாடல் எண்: 1

மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்.

பாடல் எண்: 2

மைப்பயந்த வொண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பயந்த நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான்
ஐப்பசி யோண விழாவு மருந்தவர்கள்
துய்ப்பனவுங் காணாதே போதியோ பூம்பாவாய்.

பாடல் எண்: 3

வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்
துளக்கில் கபாலீச் சரத்தான்றொல் கார்த்திகைநாள்
தளத்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்.

பாடல் எண்: 4

ஊர்திரை வேலை யுலாவு முயர்மயிலைக்
கூர்தரு வேல்வல்லார் கொற்றங்கொள் சேரிதனில்
கார்தரு சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
ஆர்திரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய்.

பாடல் எண்: 5

மைப்பூசு மொண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பூசு நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான்
நெய்ப்பூசு மொண்புழுக்க னேரிழையார் கொண்டாடும்
தைப்பூசங் காணாதே போதியோ பூம்பாவாய்.

பாடல் எண்: 6

மடலார்ந்த தெங்கின் மயிலையார் மாசிக்
கடலாட்டுக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
அடலானே றூரு மடிக ளடிபரவி
நடமாடல் காணாதே போதியோ பூம்பாவாய்.

பாடல் எண்: 7

மலிவிழா வீதி மடநல்லார் மாமயிலைக்
கலிவிழாக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
பலிவிழாப் பாடல்செய் பங்குனி யுத்தரநாள்
ஒலிவிழாக் காணாதே போதியோ பூம்பாவாய்.

பாடல் எண் : 8

தண்ணா வரக்கன்றோள் சாய்த்துகந்த தாளினான்
கண்ணார் மயிலைக் கபாலீச் சரமமர்ந்தான்
பண்ணார் பதினெண் கணங்கடம் மட்டமிநாள்
கண்ணாரக் காணாதே போதியோ பூம்பாவாய். .

பாடல் எண்: 9

நற்றா மரைமலர்மே னான்முகனு நாரணனும்
முற்றாங் குணர்கிலா மூர்த்தி திருவடியைக்
கற்றார்க ளேத்துங் கபாலீச் சரமமர்ந்தான்
பொற்றாப்புக் காணாதே போதியோ பூம்பாவாய்.

பாடல் எண்: 10

உரிஞ்சாய வாழ்க்கை யமணுடையைப் போர்க்கும்
இருஞ்சாக் கியர்க ளெடுத்துரைப்ப நாட்டில்
கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரத்தான்றன்
பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய்.

பாடல் எண்: 11

கானமர் சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
தேனமர் பூம்பாவைப் பாட்டாகச் செந்தமிழான்
ஞானசம் பந்த னலம்புகழ்ந்த பத்தும்வல்லார்
வானசம் பந்தத் தவரோடும் வாழ்வாரே.

பதிகத்தின் சாரம்: மணம் பொருந்திய சோலைகள் சூழ்ந்த மயிலையில் விளங்கும் கபாலீச்சரம் என்னும் கோயிலில் எழுந்தருளிய இறைவன்மீது, தேன் பொருந்திய பூவில் உறையும் பாவையை விளிக்கும் பாட்டாகச் செந்தமிழால் ஞானசம்பந்தன் இறைவனது நலம்பகழ்ந்து பாடிய இப்பத்துப்பாடல்களையும் ஓதவல்லவர் வீடுபெற்ற சிவகணத்தவரோடு கூடி நிலைத்து வாழ்வர்.



**அற்புதம்: ஆண் பனையைக் குலையீன்றச் செய்தல்**

**திருப்பதிகம்: திருவோத்தூர்**

பாடல் எண்: 1

பூத்தேர்ந்து ஆயன கொண்டு நின் பொன் அடி

ஏத்தாதார் இல்லை எண்ணுங்கால்

ஓத்தூர் மேய ஒளி மழுவாள் அங்கைக்

கூத்தீர் உம்ம குணங்களே.

பாடல் எண்: 2

இடைஈர் போகா இளமுலையாளை ஓர்

புடையீரே புள்ளிமான் உரி

உடையீரே உம்மை ஏத்துதும் ஒத்தூர்ச்

சடையீரே உமதாளே.

பாடல் எண்: 3

உள்வேர் போல நொடிமையினார் திறம்

கொள்வீர் அல்குல் ஓர் கோவணம்

ஒள் வாழைக்கனி தேன் சொரி ஒத்தூர்க்

கள்வீரே உம காதலே.

பாடல் எண்: 4

தோட்டீரே துத்தி ஐந்தலை நாகத்தை

ஆட்டீரே அடியார் வினை

ஓட்டீரே உம்மை ஏத்துதும் ஓத்தூர்

நாட்டீரே அருள் நல்குமே.

பாடல் எண்: 5

குழை ஆர் காதீர் கொடுமழுவாள் படை

உழை ள்வீர் திருஓத்தூர்

பிழையா வண்ணங்கள் பாடி நின்று டுவார்

அழையாமே அருள் நல்குமே.

பாடல் எண்: 6

மிக்கார் வந்து விரும்பிப்பலி இடத்

தக்கார் தம் மக்களீர் என்று

உட்காதார் உளரோ திருஓத்தூர்

நக்கீரே அருள் நல்குமே.

பாடல் எண்: 7

தாது ஆர் கொன்றை தயங்கும் முடி உடை

நாதா என்று நலம் புகழ்ந்து

ஓதாதார் உளரோ திருஓத்தூர்

ஆதீரே அருள் நல்குமே.

பாடல் எண் : 8

என்தான் இம்மலை என்ற அரக்கனை

வென்றார் போலும் விரலினால்

ஒன்றார் மும்மதில் எய்தவன் ஓத்தூர்

என்றார் மேல்வினை ஏகுமே.

பாடல் எண்: 9

நன்றா நால்மறையானொடு மாலும்ஆய்ச்

சென்றார் போலும் திசைஎலாம்

ஒன்றாய் உள்எரிஆய் மிக ஓத்தூர்

நின்றீரே உமை நேடியே.

பாடல் எண்: 10

கார்அமண் கலிங்கத் துவர் ஆடையர்

தேரர் சொல் அவை தேறன்மின்

ஓர் அம்பால் எயில் எய்தவன் ஓத்தூர்ச்

சீரவன் கழல் சேர்மினே.

பாடல் எண்: 11

குரும்பை ஆண்பனை ஈன் குலை ஓத்தூர்

அரும்பு கொன்றை அடிகளை

பெரும் புகலியுள் ஞானசம்பந்தன் சொல்

விரும்புவார் வினை வீடே.

பதிகத்தின் சாரம்: திருவோத்தூரில், ஆண் பனைகள் குரும்பைக் குலைகளை ஈனும் அற்புதத்தைச் செய்தருளிய கொன்றை அரும்பம் சடைமுடி உடைய இறைவரைப் பெருமை மிக்க திருப்புகலி என்னும் பெயருடைய சீகாழிப்பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் போற்றியுரைத்த இப்பாமாலையை விரும்பும் அன்பர்களின் வினைகள் அழியும்.

**அற்புதம்: சோதியிற் கலத்தல்**

**திருப்பதிகம்: நமச்சிவாயப் பதிகம்**

பாடல் எண்: 1

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே.

பாடல் எண்: 2

நம்பு வாரவர் நாவி னவிற்றினால்
வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொ னார்தில கம்முல குக்கெலாம்
நம்பன் நாமம் நமச்சி வாயவே.

பாடல் எண்: 3

நெக்கு ளார்வ மிகப்பெரு கிந்நினைந்
தக்கு மாலைகொ டங்கையி லெண்ணுவார்
தக்க வானவ ராத்தகு விப்பது
நக்கன் நாமம் நமச்சி வாயவே.

பாடல் எண்: 4

இயமன் றூதரு மஞ்சுவ ரின்சொலால்
நயம்வந் தோதவல் லார்தமை நண்ணினால்
நியமந் தானினை வார்க்கினி யானெற்றி
நயனன் நாமம் நமச்சி வாயவே.

பாடல் எண்: 5

கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனு மியம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையு நீங்குவ ரென்பரால்
நல்லார் நாமம் நமச்சி வாயவே.

பாடல் எண்: 6

மந்த ரம்மன பாவங்கள் மேவிய
பந்த னையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமு மல்குமால்
நந்தி நாமம் நமச்சி வாயவே.

பாடல் எண்: 7

நரக மேழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயின ராயி னுருத்திரர்
விரவி யேபுகு வித்திடு மென்பரால்
வரதன் நாமம் நமச்சி வாயவே.

பாடல் எண் : 8

இலங்கை மன்ன னெடுத்த வடுக்கன்மேல்
தலங்கொள் கால்விரல் சங்கர னூன்றலும்
மலங்கி வாய்மொழி செய்தவ னுய்வகை
நலங்கொள் நாமம் நமச்சி வாயவே.

பாடல் எண்: 9

போதன் போதன கண்ணனு மண்ணல்தன்
பாதந் தான்முடி நேடிய பண்பராய்
யாதுங் காண்பரி தாகி யலந்தவர்
ஓதும் நாமம் நமச்சி வாயவே.

பாடல் எண்: 10

கஞ்சி மண்டையர் கையிலுண் கையர்கள்
வெஞ்சொன் மிண்டர் விரவில ரென்பரால்
விஞ்சை யண்டர்கள் வேண்ட வமுதுசெய்
நஞ்சுண் கண்டன் நமச்சி வாயவே.

பாடல் எண்: 11

நந்தி நாமம் நமச்சிவா யவெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யால்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாசம் அறுக்கவல் லார்களே.

பதிகத்தின் சாரம்: நந்தி என்னும் பெயருடைய சிவபெருமானின் திருநாமமாகிய 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்தைச் சந்தம் மிகுந்த தமிழ் கொண்டு ஞானசம்பந்தன் அருளிச் செய்த இத்திருப் பதிகத்தைச் சிந்தை மகிழ ஓத வல்லவர்கள் பந்தபாசம் அறுக்க வல்லவர் ஆவர்.



# பயன் கொண்ட நூல்கள்


கலியபெருமாள், துறை. **(2010).** *அருள்நெறித் திருமுறைப் பாமாலை.* கோலாலம்பூர்: மலேசிய அருள்நெறித் திருக்கூட்டம்.

இராமநாதன், அரு. **(1967).** *அறுபத்து மூவர் கதைகள்.* சென்னை: பிரேமா பிரசுரம்.

சந்தர், அரு. **(2001).** *பெரிய புராணம் உரைநடை.* சென்னை: உமா பதிப்பகம்.

ஞானசம்பந்தன், அ. ச. **(2011).** *சித்திரப் பெரியபுராணம்.* சென்னை: ஸ்ரீராமகிஷ்ண மடம்.

மணவாளன், அ. அ. **(2004).** *தமிழ்ப் பக்தி இலக்கியம்.* புதுதில்லி: சாகித்திய அகாதெமி.

